# ஸ்ரீ மஹாகணபதி

தொகுப்பாசிரியர்:
ஜி.எஸ். அனந்தநாராயணன் எம்.ஏ.
துணைச் செயலாளர் விவாதப் பதிப்பாளர் (ஓய்வு)
தமிழ்நாடு சட்டமன்றப்பேரவை

தஞ்சை ஜில்லா பாபநாசம் தாலுக்கா
கணபதி அக்கிரகாரம்
ஸ்ரீ மஹாகணபதி ஆலய உத்தமோத்தபக்ஷ
அஷ்டபந்தன மகாகும்பாபிஷேக மலர்
யுவ - ஆனி - தேதி 8
22-6-1995

ஸ்ரீ மஹாகணபதி தர்மபரிபாலன
சபா வெளியீடு

"ஸ்ரீ மஹாகணபதி"

யுவ - ஆனி - 8
22-6-1995



ஓவியம்: 'லதா'
வி.வி. சீனிவாசன்,
சென்னை - 600 033.

பிரதிகள் கிடைக்குமிடம்:

என். ராகவன், செயலாளர்,
ஸ்ரீ மஹாகணபதி தர்மபரிபாலன
சபா, கணபதி அக்கிரகாரம்,
614 202

எம். கிருஷ்ணமூர்த்தி, செயலாளர்
ஸ்ரீ எஸ். சேஷு அய்யர் மெமோ
ரியல் சாரிட்டபிள் டிரஸ்ட்,
19, மாரிசெட்டி தெரு,
மந்தைவெளி, சென்னை- 600 028.

அனந்தன், 'கணயாரம்'
19, முதல்தெரு,
அலுவலர் குடியிருப்பு,
மேத்தாநகர், சென்னை - 600 029.

கம்ப்யூட்டர் கம்போசிங்:
ஸ்ரீமதி கீதா விஸ்வநாதன்,
க்ளாசிக் கம்ப்யூட்டர்ஸ்.
கே.கே. நகர், சென்னை- 78.

அச்சிட்டோர் : கே.யெம் பேக்கேஜிங் இண்டஸ்ட்ரீஸ் சென்னை - 14,

# ஸ்ரீமுகம்

ஸ்ரீ சந்த்ரமௌலீச்வராய நம:
ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்ய பரம்பராகத
பூஜ்யஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
**ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்**

ஸ்ரீமடம் — ஸமஸ்தானம்
காஞ்சீபுரம் - 631 502. — தேதி:9-1-1995

கணபதி அக்கிரகாரத்திலுள்ள ஸ்ரீ மஹாகணபதி தேவாலயத்தை ஜீர்ணோத்தாரணம் செய்து, அஷ்ட பந்தன மஹாகும்பாபிஷேகமும் செய்ய ஆரம்பித்துள்ள முயற்சிகளைக் கேட்டு ஸந்தோஷித்து ஸ்ரீ மஹா கணபதி தேவாலய ஜீர்ணோத்தாரணமும், மஹாகும்பாபிஷேக மும் நிர்விக்னமாய் நடந்து ஸ்ரீ மஹாகணபதியின் அருளால் ஸகல மங்களங்களையும் அடைந்து மக்கள் அனைவரும் பரம க்ஷேமமாக வாழ வேண்டும் என்று அனுக்கிரஹிக்கிறோம்.

நாராயண ஸ்ம்ருதி.

ஆரோக்[3]யம் பா[4]ஸ்கராத் இச்[1]சே[2]த்
ச்ரியம் இச்[1]சே[2]த் ஹுதாசநாத் ।
ஈசாநாத் ஜ்ஞானம் அந்விச்[1]சே[2]த்
ஸர்வம் இச்[1]சே[2]த் க[3]ஜாதி[4]பாத் ॥

ஸூர்யனை வழிபடுவதால் நோயற்ற வாழ்வும், அக்னியை வழிபடுவதால் செல்வமும், சிவனை வணங்குவதால் அறிவும் பெறலாம். கணபதியை வழிபட்டால் (முன் கூறிய) எல்லாப் பயன்களையும் அடையலாம்.

மேலும் ஒவ்வொரு பயனை அடைவதற்காக, வெவ்வேறு தெய்வங்களை வழிபடுவதற்கு முன் கணபதியை வழிபட்டுத் தான் மற்ற தெய்வங்களை வழிபட வேண்டும். முதலில் கணபதியை வழிபட்டு, வெவ்வேறு பயன்களின் பொருட்டு வெவ்வேறு தெய்வங்களை தனித்தனியாக வழிபடுவதைக் காட்டிலும், கணபதியின் வழிபாட்டினால் மற்ற தெய்வங்களை நாடாமலேயே எல்லா நன்மைகளையும் அடையலாம். ஆதலால் கணபதி வழிபாடு மிக உயர்ந்தது. பராசர ஸ்ம்ருதியிலும் கலியுகத்தில் மனிதன் வழிபட வேண்டிய தெய்வம் கணபதி தான் என்று தீர்மானிக்கப்பட்டுள்ளது.

பாரத தேசத்தில் கணபதியின் பெயரால் விளங்கும் கணபதி அக்ரஹாரத்தில் அகஸ்த்ய முனிவரால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டு, ஸ்ரீ ராமநாத வாத்தியார் முயற்சியால் நன்கு பராமரிக்கப்பட்டு, பக்தர்களின் அபீஷ்டங்களை வாரி வழங்கும் ஸ்ரீ மஹா கணபதியின் அருளால் யாவரும் இம்மை மறுமைப் பயன்களைப் பெற்று இன்புற்று வாழ ஸ்ரீ மஹா கணபதியை வேண்டுகிறோம்.

கும்பகோணம்,
612002

எஸ். பஞ்சாபகேச சாஸ்திரிகள்
வேதாந்த மீமாம்ஸா சிரோமணி,

## பழைமையும் புதுமையும்

"அஜம் நிர்விகல்பம் நிராகார மேகம்
நிரானந்தம் ஆனந்தம் அத்வைத பூர்ணம்
பரம் நிர்குணம் நிர்விசேஷம் நிரீஹம்
பரம் ப்ரஹ்ம ரூபம் கணேசம் பஜேம"

உருவமும் பிறப்புமற்ற விருப்பு வெறுப்புக்கு அப்பார்ப்பட்ட ஆனந்த ஸ்வரூபமான சத்ய நித்ய பரம்பொருளாக விளங்கும் ஸ்ரீ மஹாகணபதியைத் துதித்து வணங்குகிறேன்.

ஸ்ரீ மஹாகணபதியை மூலப்பரம்பொருளாகவே பாவித்து வழிபடுவது என்பது வேதகாலத்தில் இருந்தே தொடர்ந்து இருந்து வருகிறது. ஸ்ரீ கணபதியின் ப்ரபாவத்தை எடுத்துச் சொல்கிற அநேக சூக்தங்கள் நான்கு வேதங்களிலும் இருக்கின்றன. கணபதி உபாசனா முறையை விவரிக்கின்ற உபநிஷத்துகள் நான்கைந்து இருக்கின்றன. முத்கல புராணம், ஸ்ரீகணேச புராணம் இரண்டும் முழுமையாக ஸ்ரீ கணபதியைப் பற்றியே பேசுகின்றன. ஸ்ரீ கணேச புராணத்தில் ஸ்ரீ மஹா கணபதியைப் பற்றிய தோத்திரங்கள், வழிபடும் முறை, ஸ்ரீ மஹாகணபதி ஸகஸ்ரநாம ஸ்தோத்திரம் ஆகியவை உள்ளன. இதுதவிர, ஸ்ரீ கணபதிக்கு வேறுசில சகஸ்ர நாமங்களும் உண்டு. பவிஷ்யோத்தர புராணத்தில் ஸ்ரீ மஹாகணேச அஷ்டோத்தரசத நாம ஸ்தோத்திரம் உள்ளது. பார்த்தனுக்கு ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா உபதேசித்த பகவத்கீதை போல, வரேண்ய மகாராஜா வுக்கு யோகமார்க்க ஞானத்தை ஸ்ரீ மஹா கணபதியே உபதேசித்ததான 'கணேச கீதை' ஒன்றும் ஸ்ரீ கணேச புராணத்தில் உள்ளது. வியாசரின் சீடராகிய பார்கவர், பார்கவ புராணத்தில் உலக மக்களுக்கு ஸ்ரீ கணபதியின்


பிரம்மஸ்ரீ ஜி. ராமநாதவாத்யார்

மகிமையை விரிவாக எடுத்து ரைக்கிறார். தாந்த்ரீக நூல்கள் பலவற்றில் ஸ்ரீ மஹாகணபதியை வழிபடுவதற்கான மந்த்ரங்கள், யந்திரங்கள், பரிவார தேவதைகள் முதலியவை குறிப்பிடப் பெற்றுள்ளன.

அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு உறுதிப் பொருளையும் வழங்கக்கூடிய ஸ்ரீ மஹா கணபதியை வழிபடுவதற்கு ஆகமங்கள் த்யான சுலோகங்களுடன் பதினாறு விதமான கணபதி மூர்த்தங்களைக் குறிப்பிடுகின்றன. ஸ்ரீ மஹாகணபதி பக்தர்களுக்கு அருள்பாலிக்க எழுந்தருளியிருக்கும் முக்கியமான தலங்களில் ஒன்றுதான் கணபதி அக்கிரகாரம். இது தஞ்சை மாவட்டம், பாபநாசம் தாலுக்காவில் காவேரி நதியின் வடகரையில், கும்பகோணம் திருவையாறு பேருந்து வழித் தடத்தில் அமைந்துள்ளது.

சமீபகாலம் வரையில் கணபதி அக்கிரகாரம் நூறு நூற்றைம்பது ஸ்மார்த்த பிராமண மிராசுதாரர்களைக் கொண்ட கரையேடு இனாம் கிராமமாகத்தான் இருந்து வந்தது. இவ்வூரின் விஸ்தீர்ணம் 160 வேலி என்பார்கள். இவை நான்கு சேத்திகளாகப் பிரிக்கப்பட்டு 'கரையேடு கிராமம் முகாசா கணபதி அக்கிரகாரம்' என்ற பெயரில்

விளங்கி வந்திருக்கிறது. கரையேடு என்றால் இந்த ஊரில் இன்னாருக்கு இன்ன நிலம்தான் சொந்தம் என்று இருக்கவில்லை. அவர்களுக்குச் சொந்தமான பூமி விஸ்தீர்ண அடிப்படையில் அல்ல விளைச்சல் அடிப் படையில் ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை ஸ்ரீ மஹாகணபதி ஆலயத்தில் சீட்டு குலுக்கிப் போட்டு, யாருக்கு எந்த இடம் விழுகிறதோ அவர்களுக்கு அந்த இடம் சாகுபடிக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது.

சேத்தி நாட்டாண்மைக்காரர்கள்தான் ஊர் நிர்வாகம் அனைத்தையும் ஸ்ரீ மஹாகணபதி சந்நிதியில் கூடிக் கலந்துபேசி செய்து வந்திருக்கிறார்கள். இவ்வூரில் ஸ்ரீ மஹாகணபதி ஆலயம் தவிர சிவன், பெருமாள், ஐயனார், ஆகிய தெய்வங்களுக்கும் ஆலயங்கள் உண்டு. இந்தக் கோவில் நிர்வாகமும், கிராம பொதுக் கணக்குகளும் ஸ்ரீ மஹாகணபதி சந்நிதானத்தில் கூடியே ஊர் மக்கள் பரிபாலித்து வந்திருக்கிறார்கள். ஆலயங் களின் உத்ஸவங்கள் ஒவ்வொன்றுக்கும் இவ்வூர் மிராசுதாரர்களின் ஒவ்வொரு குடும்பத்தினர் உபய கர்த்தாக்களாக இருந்து வருகிறார்கள்.

நாடு விடுதலை பெற்றபின் இனாம் ஒழிப்பு எஸ்டேட் சட்டம் 26/1948 இன்படி இக்கிராம நிர்வாகப் பொறுப்பை அரசே மேற்கொண்டது. நில உடைமையா ளர்களுக்குத் தனித்தனி பட்டா வழங்கியது. இவ்வூரில் இருக்கும் ஆலயங்களுக்கு நிரந்தர வருமானம் தரக்கூடிய நிலவுடைமைகள், குடியிருப்புக் கட்டிடங்கள் எதுவும் இல்லாமையால் அருள்மிகு மஹாகணபதி, சிவன், பெருமாள், ஐயனார் கோவில்கள் இவ்வூர் ஸ்மார்த்த பிராமண சமூகத்தினரின் கோயில்களாகவே இருந்து வருகின்றன. மற்ற வகுப்பினர்களும் வந்து தங்கள் பிரார்த்தனைகளை நிறைவேற்றிக் கொள்ள இவ்வால யங்களில் எவ்விதத் தடையும் இல்லை.

ஸ்ரீ மஹாகணபதி பெயரால் அமைந்துள்ள கணபதி அக்கிரகாரத்திலுள்ள ஸ்ரீ மஹாகணபதி ஆலயம் சமீப காலத்தில் உண்டானதல்ல. தஞ்சைத் தரணியை ஆண்ட மாமன்னர்கள் காலத்தில் இருந்தே மிகப் பழைமையா னதாக விளங்கி வருகிற ஒன்றாகும். 'கணேச ராஜதானி' எனப்பெறும் திருவலஞ்சுழிக்கும் முற்பட்ட ஸ்தலம் கணபதி அக்கிரகாரம் என்பர். இவர் அகஸ்திய முனிவ ரால் ப்ரதிஷ்டை செய்யப்பெற்று, அகஸ்திய கௌதம முனிவர்களாலும், தொடர்ந்து நால்வேத விற்பன்னர் களாலும் வழிபடப்பெற்று வருகிறார்.

இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் சென்னையில் இருந்த இவ்வூர் டாக்டர் ஜி.ஆர். நாராயணசாமி அவர்களின் தந்தை, என். ராமைய்யர் என்பவரும், ஹைக்கோர்ட் வக்கீல் இவ்வூர் ஜி.பி. சுப்பிரமணிய ஐயர் என்பவரும், சீப் என்ஜினியராக இருந்த எல். வெங்கட கிருஷ்ணய்யர் என்பவரும் இதுகாறும் செங்கல் கட்டிட மாக விளங்கி வந்த ஸ்ரீ மஹாகணபதி ஆலயத்தை ஆர்.ஸி. மண்டபத்தோடு, கருங்கல் கட்டிடமாகத் திருப்பணி செய்து 1926-இல் கும்பாபிஷேகம் நடத்தி வைத்தார்கள்.

இவ்வூரில் ஸ்ரீ விநாயக சதுர்த்தி உத்ஸவம், சதுர்த்திக்கு முன்னும் பின்னுமாக கொடியேற்றம் முதல் ஆஸ்தான ப்ரவேசம் வரை பதினாறு தினங்கள் நடைபெற்று வருகின்றன. சதுர்த்திக்கு முதல்நாள் ரதோத்ஸவம். விநாயக சதுர்த்தியன்று காலை ஸ்ரீ மஹாகணபதிக்கு விசேஷ அபிஷேகம், பின்னர் தீர்த்தவாரி. இரவுகொடி இறக்கம், சுவாமி புறப்பாடு என நடைபெறுகிறது. ஆதிகாலத்திலிருந்தே விநாயக சதுர்த்தி உத்ஸவம் வேத பாராயணத்துடன் நடைபெற்று வந்திருக்கிறது. தற்போது இன்னும் விமரிசையாக மூன்று வேத பாராயணம், திருமுறை பாராயணம் ஆகியவற் றுடன் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

விநாயக சதுர்த்தியன்று மண்ணால் பிள்ளையார் பண்ணி வீட்டில் வைத்து பூஜிப்பது எல்லா இடங்களிலும் பொதுவாக வழக்கத்தில் இருந்து வருகிறது. ஆனால் கணபதி அக்கிரகாரத்தைச் சேர்ந்த வர்கள் மண்ணால் பிள்ளையார் பண்ணி வீட்டில் வைத்து பூஜிக்கிற வழக்கம் கிடையாது. தங்கள் வீட்டிலேயே கொழுக்கட்டை போன்ற நிவேதனப் பொருட்களைப் பண்ணி எடுத்துக்கொண்டு, ஆலயத் திற்குச் சென்று ஸ்ரீ மஹாகணபதிக்கு நிவேதனம் செய்து போவார்கள்.

கிராமத்தைவிட்டு பெரு நகரங்களுக்குச் சென்றிருந்தவர்கள்கூட இரண்டாவது உலக மகா யுத்தத்தின் போது (Evacuation Period) திரும்ப கிராமத்திற்கே வந்திருந்தார்கள். அந்தக் காலத்தில் கிராமம் கல கலவென்று இருந்தது அப்போது தான் நான் 1940 ல் ஒண்ணரை ரூபாய் செலவில் இரவு சந்திரோதய காலத்தில் ஸ்ரீ மஹாகணபதிக்கு சங்கஷ்டஹர சதுர்த்தி அபிஷேகம் · நடத்த ஆரம்பித்தேன். தற்போது மாதாந்திர சங்கஷ் டஹர சதுர்த்தி அபிஷே இரண்டாயிரம் ரூபாய் செலவில் தொடர்ந்து மிகச்சிறப்பாக நடந்து வருகிறது.



ஜி.எஸ். சுவாமிநாதையர் தம்பதிகள்

அரசுத் துறையில் இருந்து ஒய்வு பெற்று கிராமத்தில் வந்து தங்கிய ஜி.எஸ். சுவாமிநாத ஐயர் கிராம இளைஞர்களை எல்லாம் சேர்த்துக் கொண்டு ஸ்ரீ மஹா

கணபதிக்கு 'ஸகஸ்ரநாம கோடி அர்ச்சனை செய்யும் திட்டத்தைத் துவக்கினார் இந்தக் கோடி அர்ச்சனை பல ஆண்டுகள் நாள்தோறும் காலையும், மாலையும் தொடர்ந்து நடைபெற்று பூர்த்தியாயிற்று.

1964இல் இவ்வாலயத்திற்கு, ராஜகோபுரம் கட்டி கும்பாபிஷேகம் செய்தோம். அந்தச் சமயம் ஆலயத்திற்கு வரும் நுழைவாயிலில் ஆர்ச் கட்டி, அந்த ராஜகோபுர கும்பாபிஷேகம் நினைவில் இருக்கும் வண்ணம் ஆண்டுதோறும் அந்த நாளில் ஸ்ரீ மஹாகணபதிக்கு பால்குட அபிஷேகம், அன்னதானம், மாலையில் காஞ்சி மஹாஸ்வாமிகள் ஜயந்தி விழாவினை ஜிபி.சுப்பிரமணிய ஐயரின் பேரன் ஜி.ஜி. லக்ஷ்மணன் தொடர்ந்து நடத்திக் கொண்டு வருகிறார். இப்படி இந்த நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் ஸ்ரீ மஹாகணபதி ஆலயத்தில் த்வஜ ஸ்தம்பம் ஸ்தாபித்தது, யாகசாலை கட்டியது, உள் சுவற்றில் சலவைக்கல் பதிப்பித்தது, வெளி நடு மண்டபத்தில் நான்கு பக்க பலகணிகளிலும் அத்தி மரத்தில் செய்து வர்ணம் கொடுத்து கண்ணாடிக்கல் பதித்து, பல மூர்த்திகளை அமைத்தது, கோவில்பிராகாரச் சுவர்களை உயர்த்தி கோவில் பூராவும் இரும்பு மரக்கதவுகள் அடைப்பு, வாகன மண்டபம், வாகனங்கள் ரிப்பேர், கண்ணாடிப் பல்லக்கு, அச்சத்தேர் கட்டியது, கோவிலுக்குள் குழாய்கள், மேல்தொட்டி, மின்சார விளக்குகள், ஜெனரேட்டர்கள் அமைத்தது, உத்ஸவருக்கு, மூலவருக்கு ஆபரணங்கள் போன்ற பல திருப்பணிகள் செய்யப் பெற்று வந்துள்ளன. இக்கிராமத்தைச் சேர்ந்தவர்களின் ஆதரவினால் ஸ்ரீ மஹா கணபதி ஆலயத்திற்கு ஸ்திரமாக பல ஆண்டுகள் இருக்கக்கூடிய திருப்பணிகளை நாங்கள் செய்திருக்கிறோம்.

ஸ்ரீ மஹாகணபதி ஆலய கும்பாபிஷேகம் 1982இல் நடைபெற்று 13 ஆண்டுகள் ஆகிவிட்டன. எனக்கும் வயது 80க்கு மேலாகிவிட்டது. தனித்து எந்தக் காரியத்தையும் செய்ய என்னால் முடியவில்லை. எனவே காலதேசவர்த்தமானங்களை அனுசரித்து, இவ்வூரிலேயே இருப்பவர்களும், வெளியிடங்களிலுள்ள இவ்வூரைச் சேர்ந்தவர்களும் தங்கள் முன்னோர்களால் போற்றி பாதுகாக்கப்பட்டு வந்திருக்கும் ஸ்ரீ மஹாகணபதி ஆலய நித்ய நைமித்திக பூஜைகள் குறைவின்றி சிறப்புற இனியும் தொடர்ந்து நடந்துவர, என்னைத் தலைவராகக் கொண்டு **'ஸ்ரீ மஹாகணபதி தர்ம பரிபாலன சபா'** என்ற ஸ்தாபனத்தை அமைத்துக் கொண்டு பணியாற்றி வருகிறார்கள். இந்த ஆண்டு அருள்மிகு ஸ்ரீ மஹாகணபதி ஆலய கும்பாபிஷேகத்தையும் சிறப்புற நடத்தி வைக்க திட்டமிட்டு செயல்பட்டிருக்கிறார்கள். கள்ளங்கபட மில்லா பக்தியுடன் எல்லோரும் எனக்குத் துணையாக நின்று செயல்பட்டு வருவதைக் கண்டு நான் மனம் மகிழ்ந்து, நெகிழ்கிறேன். இங்கு ஆலயத்தில் ப்ரத்யக்ஷ மாக தரிசனம் அளிக்கும் ஸ்ரீ மஹாகணபதி தன் சர்ணத்தில் அனன்யமான பக்தியை எனக்கும் யாவருக்கும் கொடுத்து ரக்ஷிக்கப் பிரார்த்திக்கிறேன்.

ஜி. ராமநாதவாத்தியார்

ஜி. ராமநாதவாத்தியார்
தலைவர்
ஸ்ரீ மஹாகணபதி தர்ம பரிபாலன
சபா கணபதி அக்கிரகாரம்.

தேதி: 22.6.95

SRI MAHA GANAPATHI DHARMA PARIPALANA SABHA,

GANAPATHI AGRAGARAM

Place on record their sincere thanks to the following Institutions for their financial assistance in bring out this publication:

CITY TOWNSHIP ENTERPRISES, PARSN - MADRAS.

M/S MAHINDRA & MAHINDRA LTD.
827, ANNA SALAI, DHUN BUILDING,
POST BOX NO. 2430, MADRAS - 600 002.
BOMBAY, CALCUTTA, NEW DELHI, MADRAS.

M/S SIMPSON & CO. LTD.

861/862 ANNA SALAI, MADRAS - 600 002.

BRANCHES: TRICHY, BANGALORE,
OOTACAMUND, SECUNDERABAD.

OKAY TRANSPORT CORPORATION (REGD.)
VI 1184 STAR JUNCTION, COCHIN - 682 002.
BOMBAY, BANGALORE, CALCUTTA, DELHI,
MADRAS.

SREE BALAJI HOSPITAL VIRAR (E)
BOMBAY - 401 303.

SRI S. SESHU IYER MEMORIAL CHARITABLE TRUST

## சமர்ப்பணம்

ஸ்ரீ மஹாகணபதி சம்பந்தமாக இந்நூலைத் தொகுத்து அளிப்பதற்கு எனக்கு வாய்ப்புத் தந்த சபா உறுப்பினர்கள், செயலாளர், அதன் தலைவர் பிரம்மஸ்ரீ ஜி. ராமநாத வாத்தியார் ஆகியோருக்கு முதலில் என் நன்றி கலந்த பணிவான வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அரிய இப்பணியில் எனக்குப் பெரிதும் உறுதுணையாக இருந்த கம் கலாமந்திரம் ஜி.வி. முத்துராம சர்மாவுக்கும், திரு. வி. ஸ்ரீநிவாசனுக்கும் நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். ஓவியர் திரு 'லதா' முகப்பு ஓவியம் வரைந்து தந்துள்ளார்கள். திருமதி. கீதா சுந்தர் மிகுந்த சிரத்தையுடன் 'கம்ப்யூட்டரில்' இந்நூல் முழுவதையும் எழுத்து வடிவமைத்துத் தந்துள்ளார்கள். அச்சகத்தார் மிகக் குறைந்த காலத்தில் இந்நூலை அச்சிட்டு பைண்டு பண்ணித் தந்துள்ளார்கள். இவர்களுக்கெல்லாம் நான் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இப்புனித நூல் வெளிவருவதற்கு சிலர் நிதி உதவி அளித்துள்ளனர். அவர்களுக்கும் எனது நன்றியைத், தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூல் மூலம் கிடைக்கும் நன்கொடை முழுவதும் ஸ்ரீ மஹாகணபதி ஆலயத்திற்கே சேர்க்கப்பெறும்.

எனது பெரிய தகப்பனார், மகாமகோபாத்யாய வித்யாவாசஸ்பதி **ஸ்ரீ எஸ். குப்புசாமி சாஸ்திரிகள்** "The advantage to a Hindu of cultivating a prayerful attitude in his boyhood is well known and need not be stressed"

என்பார்கள். ஆகவே இந்நூலிலுள்ள ஸ்தோத்திரங்களை வருங்கால சந்ததியினர் நன்கு கற்றுப் பயன்பெறுவார்கள் என்கிற நம்பிக்கையில் பூஜ்யஸ்ரீ ஈச தம்பதிகளின் திருவடிகளை ஸ்மரித்து இந்நூலை ஸ்ரீ மஹா கணபதி ஸ்ரீ பாதகமலங்களில் சமர்ப்பிக்கிறேன்.

ஜி.எஸ். அனந்தநாராயணன்
தலைவர்.
ஸ்ரீ. எஸ். சேஷு அய்யர்
மெமோரியல் சாரிட்டபிள்
டிரஸ்ட், கணபதி அக்கிரகாரம்.

'கலையாரம்'
19, முதல்தெரு,
அலுவலர் குடியிருப்பு,
மேத்தாநகர்,
சென்னை - 600 029.

# பொருளடக்கம்

ஸ்ரீ முகம்

பழமையும் புதுமையும்

ஓம் கம் கணேசாய நம:

"பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவர் இடர்
கடிகண பதிவர அருளினன் மிகு கொடை
வடிவினர் பயில்வலி வலம் உறை இறையே"

திருஞான சம்பந்தர்.

## 1. ஸ்ரீ மகாகணபதி திருப்புகழ்

### (1)

"கைத்தல நிறைகனி அப்பமொடு அவல் பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணி
கற்றிடும் அடியவர் புத்தியில் உறைபவ
கற்பகம் எனவினை கடிதேகும்;
மத்தமும் மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனே
மட்டுஅவிழ் மலர்கொடு பணிவேனே
முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா!
அத்துயர் அதுகொடு சுப்பிரமணிபடும்
அப்புனம் அதனிடை இபமாகி
அக்குற மகளுடன் அச்சிறுமுருகனை
அக்கணம் மணமருள் பெருமாளே."

## (2)

பக்கரைவி சித்ரமணி பொற்கலனையிட்ட நடை
    பக்ஷியெனுமுக்ரதுர கமுநீப
பக்குவமலர்த் தொடையும் அக்குவடு பட்டொழிய
    பட்டுருவ விட்டருள்கை வடிவேலும்
திக்கதும திக்கவரு குக்குடமும் ரக்ஷை தரு
    சிற்றடியு முற்றியப னிருதோளும்
செய்ப்பதியும் வைத்துயர்தி ருப்புகழ்வி ருப்பமொடு
    செப்பென எனக்கருள்கை மறவேனே
இக்கவரை நற்கனிகள் சர்க்கரைப ருப்புடனெய்
    எட்பொரிய வற்றுவரை இளநீர்வண்
டெச்சில்பய றப்பவகை பச்சரிசி பிட்டுவெள
    ரிப்பழமி டிப்பல்வகை தனிமூலம்
மிக்கஅடி சிற்கடலை பக்ஷணமெனக்கொளொரு
    விக்கிநச மர்த்தனென மருளாழி
வெற்பகுடி லச்சிடில் விற்பரம ரப்பரருள்
    வித்தகம ருப்புடைய பெருமாளே.

— அருணகிரி நாதர்

> மூஷிக வாஹன மோதக ஹஸ்த சாமர கர்ண விளம்பித சூத்ர |
> வாமன ரூப மஹேச்வர புத்ர விக்ன விநாயக பாத நமஸ்தே ||
> வக்ரதுண்ட மகாகாய ஸூர்ய கோடி ஸமப்ரப |
> நிர்விக்னம் குருமே தேவ ஸர்வ கார்யேஷு ஸர்வதா ||
> யஸ்வ ஸ்மரண மாத்ரேண விக்னா தூரம் ப்ரயாந்திஹி |
> வந்தேஹம் தந்தி வக்த்ரம் தம் வாஞ்சி தார்த்த ப்ரதாயகம் ||

# 2. செவிச்செல்வம்



"எல்லோரும் நல்ல விஷயத்தைக் கேட்பதில் ஆர்வம் காட்ட வேண்டும். நல்லதைக் கேட்டால்தான் நல்லதைப் பேசமுடியும் என்பதாக 'கம் கலா மந்திரம்' ஜி.வி. முத்துராம சர்மா வெளியிட்டுள்ள கணபதி அக்கிரகாரம் ஸ்ரீ மகா கணபதி ஸுப்ரபாத ஒலிப் பேழையில் வழங்கியுள்ள அருளாசி.

***காஞ்சி காமகோடி பீடாதிபதி***
***ஸ்ரீ ஜகத்குரு ஜயேந்திர சுவாமிகள்.***

"ச்ருதி ஸ்ம்ருதி புராணானாம் ஆலயம் கருணாலயம் ।
நமாமி பகவத்பாத சங்கரம் லோக சங்கரம்" ॥

ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபனம் செய்தார். அவைகளுள் கணபதி ஒரு வழிபாட்டு முறையாக ஏற்றுக் கொண்டிருக்கிறார். கணபதி, முருகன், சிவன், அம்பாள், விஷ்ணு, சூர்யன் இவைகளுள் கணபதி முதன்மை ஸ்தானத்தை வகிக்கிறார்.

வீட்டிலும் நாம் எந்தக் காரியம் செய்வதாய் இருந்தாலும் முதன்முதல் கணபதியை வழிபாடு செய்து விட்டுத்தான் தொடங்குவோம். வியாச மகாபாரதம் கூட கணபதியைவிட்டுத்தான் எழுதப்பட்டது.

அழகுக்கு முக்கியமானது தந்தம் யானைக்கு. அதைக் காட்டிலும் முக்கியமானது அறிவுக்களஞ்சிய மாக, தர்ம ஸ்வரூபமாக, ஞான ஸ்வரூபமாக விளங்குவது மகாபாரதம். அப்படிப்பட்ட ஞானச் செல்வமாக

விளங்கக்கூடிய மகாபாரதத்தை தன் தந்தத்தில் ஒன்றையே ஒடித்துக் கொண்டு விநாயகர் எழுதினார்.

தாய், தந்தை இருவராலும் மகிழ்விக்கப்பட்டவர், சந்தோஷப் படுத்தப்பட்டவர் விநாயகப் பெருமான். த்ரிபுர சங்காரத்தின்போது வெளியில் வந்தபோது விநா யகப் பெருமானை நினைந்து, அதன் மூலம் தேங்காய் உடைப்பது முதல் த்ரிபுர சங்காரம் நிறைவேறி விநா யகப் பெருமான் சந்தோஷப்படுத்தப்பட்டார்.

அதேபோல் மகிஷாசுரனை வதம் செய்யப் போகும்போது பண்டாசுரன் விக்ன யந்திரத்தை வைத்து, இடையூறு யந்திரத்தை வைத்து ஒன்றுமே செய்ய முடியாமல் தடுத்துவிட்டான். "பண்டாசுர வதோத் யுக்த விக்ன யந்திரப் பிரகர்ஷிதாயை நம:", என்று சொல்லப் பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட விக்ன யந்திரத்தைப் போக்கடித்து தாயாருடைய அருளையும் பெற்றவர் விநா யகப் பெருமான்.

இப்படி பார்வதி – பரமேச்வரன் இருவராலும் மகிழ்விக்கப்பட்டவர். நமக்கெல்லாம் ஞானத்தைத் தருப வர். முக்கியமாக மகாபாரதத்தை எழுதியுள்ளவர். எல் லாவித இடையூறுகளையும் அகற்றக் கூடியவர். முழு முதற் கடவுளாக விளங்கக்கூடியவர். எப்படி அழைத்தா லும் குழந்தை முதல் கிழவர் வரை அனைவராலும் வழி படக்கூடியவர். எந்த விதத்திலே – மஞ்சளிலே, மண் ணிலே இழைத்தாலும் செம்பிலே இழைத்தாலும், தங்கத் திலே இழைத்தாலும் எல்லாவிதத்திலும் வழிபடுவதற்கு இணங்கி அருளக் கூடியவர். அருகம்புல்லைப் போட்டா லும் வெறும் இலையைப் போட்டாலும் எந்தப் புஷ்பத் தையும் ஏற்றுக்கொள்ளக்கூடியவர். பகவானுக்குள்ளே எப்படி அழைத்தாலும் வளைந்து நின்று அருள் சுரக்கக்

கூடிய ஒரு வடிவத்திலே இருந்து அருள் பாலிக்கக்கூடிய ஒரே பெருமான் விநாயகப் பெருமான்.

கணபதி அக்கிரகாரம் என்று அவர் பெயரைக் கொண்டு ஒரு அக்கிரகாரமே தஞ்சை ஜில்லாவில் வழங்கி வருகிறது. அங்குள்ள பெருமானுக்கு விசேஷ சிறப்புகள் எல்லாம் உண்டு. அந்த ஊரில் இருந்து பெரிய பெரிய மேதாவிகள் எல்லாம் வெளியூர்களுக்குச் சென்றிருக்கிறார்கள். அறிஞர்கள் எல்லாம் சென்றிருக்கி றார்கள். அந்த கணபதிபெருமானுக்கு ஒரு சுப்பிரபாதம் ஒன்று இயற்றி அதை வெளியிட இருக்கிறார்கள்.

கணபதிக்கென்றே தனிப்புராணமே இருக்கிறது, பதி னெட்டு புராணங்களிலே. அவருடைய பெருமைகள் விசேஷமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. கண்ணபிரான் கூட கணபதியைத் தொழுததாக வரலாறு எல்லாம் உண்டு. ஆகவே அத்தகைய பெருமை கொண்ட கணபதி யினுடைய பெருமைகள் எல்லாம் – **கணபதி அக்கிரகா ரத்தில்** குடிகொண்டுள்ள **ஸ்ரீ மஹாகணபதி பெருமான்** சுப்ரபாதம் வழியாக நாம் கேட்க இருக்கிறோம். இதை ஒரு காசெட் வழியாக வெளியிட இருக்கிறார்கள்.

எல்லோரும் நல்ல விஷயத்தைக் கேட்பதில் ஆர்வம் காட்ட வேண்டும். நல்லதைக் கேட்டால்தான் நல்லதைப் பேச முடியும். அப்போதுதான் நல்லதைச் சிந்தனை செய்ய முடியும்.

ஆகவே முழுமுதற்கடவுளான கணபதி பெரு மானை நாம் எல்லாம் நினைப்பதற்கு, அவரைப் பற்றிப் பேசுவதற்கு வாய்ப்பாக நல்லதைக் கேட்பதற்காக அமைக்கப்பட்டுள்ள சுப்பிரபாதத்தைக் கேட்டு, மகிழ்ந்து அவர் அருளால் எல்லா நன்மைகளும் பெற வேண்டுமாய் வாழ்த்தி ஆசீர்வதிக்கிறோம்.

# 3. ஸ்ரீ மஹாகணபதி ஸுப்ரபாதம்

கம் கலாமந்திரம் ஜி.வி. முத்துராம சர்மா

கல்வியில் ஆர்வமுள்ள, ஏழை மாணவர்களுக்கு உதவுதல், போலியோ நோயினால் பாதிக்கப்பட்டவர்களுக்குத் தொண்டாற்றும் அமர்சேவா சங்கத்திற்கு உதவுதல் போன்ற நற்பணிகளில் ஈடுபட்டு வரும் கம் கலாமந்திரம் என்ற டிரஸ்டை நிறுவியுள்ள திரு **ஜி.வி. முத்துராம சர்மா** கணபதி அக்கிரகாரம் பிரும்மஸ்ரீ ஜி. ராமநாதவாத்தியாரின் உள்ளக்கிடக்கையைப் பூர்த்தி செய்ய பக்தி பூர்வமாக இயற்றி, இதனை 31-7-94ல் வெளியிட்டுள்ளார். 'கம் (GAM) கலாமந்திரம்' என்பது கணபதி அக்கிரகாரம் மகாகணபதி கலாமந்திரம் என்பதன் சுருக்கமே என்பதை அறியும்போது அப்பெருமானிடம் இவருக்குள்ள பக்தி புலப்படும். இந்த ஸுப்ரபாதத்தைக் கொண்டே கணபதிபுராணம், கணபதி ஸகஸ்ரநாமம், த்ரிசதி, உபாசனா பத்ததி ஆகியவற்றில் சர்மாவுக்குள்ள ஆழ்ந்த ஈடுபாட்டையும், ஞானத்தையும் நாம் உணரலாம்.

"அகரமென அறிவாகி உலகமெங்கும்
அமர்ந்தகர உகர மகரங்கள் தம்மால்
பகருமொரு முதலாகி வேறு மாகிப்
பல வேறு திருமேனித் தரித்துக் கொண்டு
புகரில் பொருள் நான்கினையும் இடர்தீர்ந்தெய்தப்
போற்றுனருக்கறக் கருணை புரிந்தல்லாருக்கு
நிகரின் மறக் கருணை புரிந்தாண்டு கொள்ளும்
நிருமலனைக் கணபதியை நினைந்து வாழ்வாம்."
ஸ்ரீ கச்சியப்ப முனிவர்.

(1) முதாகர நமஸ்காரோ மூலாதார ப்ரபுத்தயே ।
சச்வந்முக்தி ப்ரஸித்ஸுநாம்ஆவஹேத்விஜயச்ரியம் ॥

(2) கஜானனம் கலாதாரம் கருணாமூர்த்தி சோபிதம் ।
லம்போதரம் மோதகாட்யம் ஸம்பத்பத முபாஸ்மஹே ।

(3) விநாயகம் ஸுநாயகம் வேதாகம நமஸ்க்ருதம் ।
அநாதிநாதம் ஸர்வஜ்ஞம் ஹரஸுத மஹம்பஜே ॥

(4) ஸிம்ஹாருடம் த்ரிநேத்ரம் கரதலவிலஸத் ஸ்வதந்த பாசாங்குசாட்யம்
பக்தாபீஷ்ட பலப்ரதம் த்ரிபுவனஸ்யை காந்தஸ்ருஷ்டி ப்ரதம்
ஸர்வாபத்வி நிவாரணாய த்ரிஜகத: க்ஷேமாய ஸர்வாத்மனா
ப்ரபத்யே விக்னேசம் விஷயஸுகர ·ஸாஸ்வாத விச்சேதகாம: ॥

(5) ஜயோ பவது தே தாத ஜய பாரத காரண ।
உத்பவேத் உன்னதிர் நித்யம் உத்திஷ்ட கருணாலய ॥

(6) உத்திஷ்டோத்திஷ்ட ஹேரம்ப உத்திஷ்ட மூஷிகத்வஜ ।
உத்திஷ்ட கிரிஜாபுத்ர த்ரைலோக்யம் மங்களம் குரு ॥

(7) அம்ருதோத்பவ ஸுப்ரீத ஸுஹ்ருதானந்த தாண்டவ।
மோதகாரண ஹ்ருல்லாஸ ஸமுத்திஷ்ட அகநாசன ॥

(8) சிவஸேவித பாதாப்ஜ சிதானந்த விக்ரஹ ।
உதாரகீர்த்தே விக்னேச புத்யஸ்வ கணநாயக ॥

(9) காவேரீதீர ரஸிக கருணாரஸ விக்ரஹ ।
கல்யாண காரணாதீச உத்திஷ்ட கணநாயக ॥

(10) பார்வதீ புத்ர ஜாதேவ பூர்வா ஸந்த்யா ப்ரவர்ததே ।
உத்திஷ்ட ப்ரணவாகார த்ரைலோக்யம் மங்களம் குரு॥

(11) விக்னேச வீர்யாணி விசித்ரகாணி
பந்தீஜனை : மாகதை : ஸைஸ்ம்ருதானி ।
ச்ருத்வா ஸமுத்திஷ்ட கஜானனத்வம்
ப்ராஹ்மே ஜகன் மங்களகம் குரு ॥

12) பூஜாஸ்பத ப்ரதமமேவ ஸுரேஷு மத்யே
ஸம்பூரணே குசலபக்தமநோ ரதானாம் ।
கீர்வாண ப்ருந்த பரிபூஜித பாதபத்ம
ஸஞ்ஜாயதாம் கணபதே தவ ஸுப்ரபாதம் ॥

(13) ஷட்கோண மத்யவிலஸத் ப்ரணவ ஸ்வரூப
ஷட்பாவ வர்ஜித ஸதாசிவ புண்யமூர்த்தே |
ஸப்தர்ஷி மண்டல ஸமர்ச்சித ஸாந்தரேச
ஸ்ரீமன் மஹாகணபதே தவ ஸுப்ரபாதம் ||

(14) ஸ்வதிவ்ய நாமாங்கித க்ராம வாஸ
வேதாந்த வேத்ய நிகமாந்த ஸார |
ஸ்வபக்த கல்பக்த கலா வதம்ஸ
கணேச மூர்த்தே தவ ஸுப்ரபாதம் ||

(15) ஸ்ரீஸஹ்யோத்பவா ப்லாவித சோள தேசே
ஸ்ரீவிரிஞ்சி ஹரிவந்தித திவ்ய மூர்த்தே |
த்வத்பாத மாச்ரயந்தி ஸுஸித்த ஸங்கா:
ஸ்ரீமன் மஹாகணபதே தவ ஸுப்ரபாதம் ||

(16) ஸ்ரீகௌரீ நாத மனோஹர தீப்ர தீப்தே
ஸ்ரீகௌதமாதி முனிபுங்கவ பூஜிதாங்க்ரே |
ஔவை மனீஷித நிரந்தர புத்தி தாத:
ஸ்ரீ கல்யாண கணபதே தவ ஸுப்ரபாதம் ||

(17) கும்பஸம்பவ ஹேரண்டாதி முனீச்வரா:
தூர்வார்க்க பத்ராதி ஸமேத ஹஸ்தா: |
த்வத் பாதபத்ம யுகளம் ஸததமா ச்ரயந்தே
ஸ்ரீ மஹாகணபதே தவ ஸுப்ரபாதம் ||

(18) ஸ்ரீப்ரஹ்மவிஷ்ணு ஸுரநாயக தேவ முக்யா:
த்வத்பாத பத்மயுகளம் நிதராம் ஸ்மரந்தி |
கங்கா ப்ரவாஹாந்தர்கத ஸலில பூர்ணம்
கும்பாஸ்ச காஞ்சனமயா: புரதோல ஸந்தி ||

(19) த்வல்லப்த–நதீரியம் கலுகாவேரி தோயம்
வாத்ஸல்யாத் கலுவாஸ வேதியம் ப்ரதத்தா |

காருண்யாம்பு வாரிஜம் ஸகலம்ஜலம் போ:
ஸ்ரீமஹா கணபதே தவ ஸுப்ரபாதம் ||

(௨0) ஸ்ரீகாஞ்சீ நகராவாஸ யதிவர் க்கியாய தீமதே
கருணாஜலபூரேண சிராயு: ஸ்வாஸ்த்யமப்யதா: |
வராய வரதாத்ரே தே மங்களாசாஸனம் மம
பூயாத் ஸ்ரீசந்த்ர மௌளீச ஸுப்ரபாத மஹர்திவம் ||

(௨1) ஏதே த்விஜா: ஸகல சாஸ்திரவித : பவித்ரா:
மந்த்ரம் படந்தி மதுரஸ்வர பூர்ணகண்டா: |
த்வாரே திஷ்டந்தி தவ பூஜனதத்த சித்தா:
ஸ்ரீமஹா கணபதே தவ ஸுப்ரபாதம் ||

(௨௨) ப்ரஸீத நித்யம் தவ பாத பத்மம்
நயஸ்வ மாம் பிரம்மபதம் க்ருபாளோ |
ஸித்தயா ச புத்தயா ச கணேச யுக்தா
நத்வா ஜன:ஸர்வபலம் லபதே அசிராத் ||

(23) ய: ச்ருணோதி ய: படதி ப்ரபாதகே தவ புண்யநாம
த்வத்ப்ர பாவாத் விபுலம் தனம் புண்யஸந்தனஞ் சயாதி |
ஸஞ்சித்ய ஸ்வமனஸி தவபாத பத்மம்
வின்யஸ்ய மூர்த்னி ஹ்ருதி பாவயாம: ||

ஸகல முனிப்ருந்த ஸமப்யர்ச்யமான மஞ்சுள சரணாரவிந்த, அனந்த ஸூர்யாகம தேஜோவிலாஸ, புவனமோஹன ஸௌந்தர்ய திவ்ய மங்களவிக்ரஹ நித்யானந்த ஸாக்ஷாத்கார நிர்மல நிராமய நிர்குண நிர்விகல்ப நிராச்ரய, மஹாவாக்ய ஸித் தாந்த தத்வ ஸ்வரூப, கணபத்யக்ரஹாரே விராஜமான ஸ்ரீமஹா கணபதே ஜய விஜயீபவ | ஜய விஜயீபவ ||

ஸ்ரீ காவேரீதீர வாஸைகலோல கரத்ருத ஆம் ரப்ரிய, ஸித்தி புத்யா லிங்கித திவ்யகாத்ர, பக்தஜனா

வனசில, அகஸ்த்ய கௌதமாதி ரிஷிகணவந்த்யமான திவ்ய சரணாரவிந்த ருணமோசன தயார்ணவ நாத ஸக லாகம விநோத ஸததம் சிந்திதானாம் ஸந்தான ஸௌ பாக்ய தாயக ஸ்ரீகண்டபுத்ர, சிதானந்தரூப கணபத்யக்ர ஹாரே விராஜமான ஸ்ரீமஹாகணபதே ஜய விஜயீபவ। ஜய விஜயீபவ ॥

ஐந்து கரத்தினை ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினை
புந்தியில்வைத்தடிபோற்றுகின்றேனே

**திருமூலர்.**

களியானைக் கன்றைக் கணபதியை செம்பொன்
ஒளியானைப் பாரோர்க் குதவும் அளியானைக்
கண்ணுவதும் கைத்தலங்கள் கூப்புவதும் மற்றவன்தாள்
நண்ணுவதும் நல்லார் கடன்.

**11 — ஆம் திருமுறை**
**கபில தேவ நாயனார்.**

மொழியின் மறைமுதலே முந்நயனத் தேறே
கழிய வருபொருளே கண்ணே – தெழிய
கலாலயனே எங்கள் கணபதியே நின்னை
அலாதையனே சூழாதென் அன்பு.

**11 ஆம் திருமுறை**
**அதிராவடிகள்.**

# 4. ஸ்ரீ வல்லபேச கராவலம்பனம்

1. ஓமங்க்4ரி-பத்3ம-மகரந்த2-குலாம்ருதம் தே
நித்யம் யஜந்தி தி2வி யத் ஸுரஸித்2த4- ஸங்கா4 :।
ஜ்ஞாத்வாம்ருதஞ்ச1க3ணச ஸ்தத2ஹம் ப4ஜாமி
ஸ்ரீவல்லபே4ச மம தே2ஹி கராவலம்ப3ம் ॥

2. ஸ்ரீமாத்ரு ஸூனுமது4னா சரணம் ப்ரபத்2யே
தா3ரித்3ர்ய-துக்க2-சமனம் குரு மே க3ணேச ।
மத்-ஸங்கடஞ்ச ஸகலம் ஹர விக்4ன-ராஜ
ஸ்ரீவல்லபே4ச மம தே2ஹி-கராவலம்ப3ம் ॥

3. க2ங்கா3-த4ராத்மஜ விநாயக மூல-மூர்த்தே
வ்யாதி4ம் ஜவேன விநிவாரய பா2ல-சந்த்3ர ।
விஜ்ஞான-த்3ருஷ்டிம் அநிசம் மயி ஸந்நிதே4ஹி
ஸ்ரீவல்லபே4ச மம தே3ஹி கராவலம்ப3ம் ॥

4. கண்யம் மதீ3ய-ப4வனஞ்ச1விதா4ய த்2ருஷ்ட்யா
மத்3-தா2ர-புத்ர-தனயான் ஸஹஜாம்ச்ச1 ஸர்வான் ।
ஆக2த்ய சா1சு பரிபாலய சூர்ப்பகர்ண
ஸ்ரீவல்லபே4ச மம தே3ஹி கராவலம்ப3ம் ॥

5. ணாகார-மந்த்ர-க4டிதம் தவ யந்த்ர-ராஜம்
ப4க்த்யா ஸ்மராமி ஸததம் தி3ச ஸம்பதோ3மே ।
உத்3யோகஸித்3தி4ம் அதுலாம் கவிதாஞ்ச லக்ஷ்மீம்
ஸ்ரீவல்லபே4ச மம தே3ஹி கராவலம்ப3ம் ॥

6. பாதா3தி3-கேசம் அகி2லம் ஸூத4யா ச1 பூர்ணம்
கோசாக்னி-பஞ்ச1கமித2ம் சிவ-பூ4த-பீ3ஜம் ।
த்வத்3-ரூபவைப4வம் அஹோ ஜனதா ந வேத்தி
ஸ்ரீவல்லபே4ச மம தே3ஹி கராவலம்ப3ம் ॥

7. தாப-த்ரயம் மம ஹராம்ருத-த்3ருஷ்டி-வ்ருஷ்ட்யா
பாபம் வ்யபோஹய க3ஜானன சாபதோ மே |
துஷ்டம் விதா4த்ரு-லிகி2தம் பரிமார்ஜயாசு
ஸ்ரீவல்லபே4ச மம தே3ஹி கராவலம்ப3ம் ||

8. யே த்வாம் ப4ஜந்தி சிவ-கல்பதரும் ப்ரசஸ்தம்
தேப்4யோ த3தா3ஸி குசலம் நிகி2லார்த2லாபம் |
மஹ்யம் ததை2வ ஸகலம் தி3ச வக்ர-துண்ட2
ஸ்ரீவல்லபே4ச மம தே3ஹி கராவலம்ப3ம் ||

9. நாதா3ந்த-வேத்3யம் அமலம் தவ பாத3-பத்2மம்
நித்யம் யஜே விபு3த4ஷட்பத3-ஸேவ்யமானம் |
ஸத்தா-சமாத்3யம் அகி3லம் தி3ச மே க3ணேச
ஸ்ரீவல்லபே4ச மம தே3ஹி கராவலம்ப3ம் ||

10. மோதாம்ருதேன தவ மாம் ஸ்நபயாசு பா3லம்
பாபாப்3 தி4பங்க லுலிதஞ்ச ஸஹாய-ஹீனம் |
வஸ்த்ராதி3 பூ4ஷண த4னானி ச வாஹனாதீ3ன்
ஸ்ரீவல்லபே4ச மம தே3ஹி கராவலம்ப3ம் ||

11. ஸ்ரீவல்லபே ச த3சகம் ஹட2யோக3ஸாத்4யம்
ஹேரம்ப2 தே ப4க3வதீச்வர ப்4ருங்க3 நாத3ம் |
ச்ருத்வாநிசம் ச்ருதிவித3: குலயோகி2னோ யே
பூ4திப்ரத3ம் பு4வி ஜனா: ஸுதி4யோ ரமந்தாம் ||

---

கணேச புராணத்தில் வரேண்ய ராஜனுக்கு மஹாகணபதி உபதேசித்ததாகவுள்ளது **கணேச கீதை**யாகும்.

“பக்தியோடு ஜனங்கள் எந்தெந்த வடிவத்தில் என்னை வழிபட்டாலும், அந்தந்த வடிவில் அவர்கள் முன் நான் காட்சி அளிக்கிறேன்.”

**யேனயேன ஹி ரூபேண ஜனோமாம் பர்யுபாஸதே |**
**ததாததா தர்சயாமி தஸ்மைரூபம் ஸுபக்தித: ||**

**கணேச கீதை 9–40**

# 5. 'பஞ்சமாதங்க முக கணபதி'

இந்தக் கீர்த்தனம் சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான ஸ்ரீ முத்துசாமி தீக்ஷிதரால் பாடப்பெற்றதாகும். இவர் மகாகணபதி குறித்து 24 கீர்த்தனங்கள் செய்துள்ளார். ஒவ்வொன்றிலும் த்யான சுலோகங்களின் கருத்துக்கள் பொதிந்திருக்கும். 'மகாகணபதி, சித்தி கணபதி, வித்யா கணபதி, சக்தி கணபதி, மோக்ஷ கணபதி' ஆகிய ஐவரும் ஒன்றாக இருக்கும் மூர்த்தமே 'பஞ்சமுக கணபதி' என்பர்:

ராகம்:மலஹரி. தாளம்: ரூபம்

ப. பஞ்ச மாதங்க முக கணபதினா பரிபாலிதோஹம்
ஸுமுகேன ஸ்ரீ

அ. பஞ்ச பூத ஆத்மக ப்ரபஞ்சோதயாதி கரண
விரிஞ்சி ஹரி ருத்ரநுதேன பஞ்சவக்த்ர
சிவ ஸுதேன (பஞ்ச)

ச. வரத அபய பாச ஸ்ருணி கபால தந்த
மோதக முத்கராக்ஷ மாலா கரேண
கமலாபுர விஹாரேண புருஹூதாத் யகில தேவ
பூஜித விக்னேச்வரேண வரகுருகுஹ ஸோதரேண
ஸுருசிர லம்போத ரேண கருணாங்க கௌரதரேண
கலிமல ஹரண தரேண (பஞ்ச)

---

தொலைக்காட்சி, வானொலி மூலம் தம் ரம்யமான குரலில் பாடி மகிழ்வித்துவரும் திருமதி **உமா சுப்பிரமணியம் பி.ஏ.,** அவர்களைப் பலரும் அறிவர்.. இவர் யாதொரு பிரதிபயனும் கருதா மல், 'கம் கலாமந்திரம்' வெளியிட்டுள்ள ஒலிப்பேழையில் பொருள் புதைந்துள்ள ஒவ்வொரு பாடலுக்கும் பொருத்தமான ராகங்களைத் தேர்ந்தெடுத்து, பக்தி பரவசத்தோடு பாடியிருக்கிறார்கள்.

# 6. ஔவையார் அருளிய விநாயகர் அகவல்



விநாயகரை புருவ மத்தியில் தியானம் பண்ணிக்கொண்டு, விநாயகர் அகவலைத் தினந்தோறும் பாராயணம் செய்து வந்தால் மூலாதார ஸ்வரூபியான விநாயகர் குண்டலினீ சக்தியை, சரீரத்தில் கைலாசம் எனப்படுகிற ப்ரம்மரந்திரத்திற்கு தம் துதிக் கையால் தூக்கிவிட்டுவிடுவார் என்கிற யோக நுட்பத்தை உணர்த்துகிற அருளுரை:

ஸ்ரீ காஞ்சி மகாஸ்வாமிகள்
சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி.

தமிழ் தெரிந்தவர்களுக்கு ஔவையார் என்றால் தெரியாமல் இருக்காது. அவர் எழுதியிருக்கும் 'விநாயகர் அகவல்', முழுக்க முழுக்க யோக சாஸ்திரம். 'எப்படித் தியானம் பண்ண வேண்டும்? குண்டலினி சக்தியை ஸஹஸ்ராரத்திற்கு எழுப்புவது எப்படி?' போன்ற பல சூக்ஷ்மமான யோக சாஸ்திர விஷயங்களை அதன் மூலம் அவர் தெரிவித்திருக்கிறார்கள்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளும், சேரமான் பெருமாளும் யானை மீதும், குதிரை மீதும் கைலாசத்திற்குப் போகும்போது, ஔவையாரையும் சீக்கிரம் வரச் சொன்னார்களாம். ஔவையார் அப்போது விநாயக பூஜை பண்ணிக் கொண்டிருந்தார். 'கைலாசத்தைவிட எனக்கு விநாயகர் பூஜைதான் முக்கியம்' என்று ஔவை சொல்லிவிட்டாளாம். அவர்கள் போய்விட்டார்கள்.

பூஜை முடிந்த பிறகு 'கைலாசத்திற்கு அவர்கள் போய் விட்டார்களே, நான் எப்படிப் போவது,

பிள்ளையாரே' என்று விநாயகரை ஔவை பிரார்த்தித் துக்கொண்டாளாம். அவர்கள் கைலாசம் போய்ச சேருவதற்குள்ளே, விநாயகரே தம் துதிக்கையால் ஔவை யாரைத் தூக்கி கைலாசத்தில் வைத்துவிட்டார் என்று ஒரு கதை சொல்வது வழக்கம்.

ப்ரணவ ஸ்வரூபியான விநாயகரை புருவ மத்தியில் த்யானம் பண்ணிக்கொண்டு, ஔவையார் பண்ணின அனுக்கிரகந்தான் விநாயகர் அகவல்.

## விநாயகர் அகவல்

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலஇசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகில் ஆடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்குசிந் தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட நீலமேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்
இரண்டு செவியும் இலங்கு பொன்முடியும்
திரண்டமுப் புரிநூல் திகழ்ஒளி மார்பும்
சொற்பதங் கடந்த துரியமெய்ஞ் ஞான
அற்புதம் நின்ற கற்பகக் களிறே!
முப்பழம் நுகரும் மூஷிக வாகன
இப்பொழு தென்னை ஆட்கொள வேண்டித்
தாயாய் எனக்குத் தானெழுந் தருளி
மாயாப் பிறவி மயக்கம் அறுத்துத்

திருந்திய முதல்ஐந் தெழுத்தும் தெளிவாய்
பொருந்தவே வந்தென் உளந்தனிற் புகுந்து
குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திறம் இது பொருள்என
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளி
கோடா யுதத்தாற் கொடுவினை களைந்தே
உவட்டா வுபதேசம் புகட்டிஎன் செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையும் காட்டி
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணையின் இனிதெனக் கருளிக்
கருவிகள் ஒடுங்குங் கருத்தினை அறிவித்து
இருவினை தன்னை அறுத்திருள் கடிந்து
தலம் ஒரு நான்கும் தந்தெனக் கருளி
மலம்ஒரு மூன்றின் மயக்கம் அறுத்தே
ஒன்பது வாயில் ஒருமந் திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதும் காட்டி
ஆறா தாரத்து அங்குச நிலையும்
பேறா நிறுத்திப் பேச்சுரை அறுத்தே
இடைபிங் கலையின் எழுத்தறி வித்துக்
கடையிற் சுழிமுனைக் கபாலமுங் காட்டி
மூன்றுமண் டலத்தின் முட்டிய தூணின்
நான்றுஎழு பாம்பின் நாவில் உணர்த்திக்
குண்டலி யதனிற் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட வுரைத்து
மூலா தாரத்தின் மூண்டெழு கனலைக்
காலால் எழுப்புங் கருத்தறி வித்தே
அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையுங் கூறி
இடைச்சக் கரத்தின் ஈரெட்டு நிலையும்

உடற்சக் கரத்தின் உறுப்பையும் காட்டி
சண்முக தூலமும் சதுர்முக சூக்கமும்
எண்முக மாக இனிதெனக் கருளிப்
புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரிஎட்டு நிலையும் தெரிசனப் படுத்திக்
கருத்தினிற் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி இனிதெனக் கருளி
என்னை அறிவித்து எனக்கருள் செய்து
முன்னை வினையின் முதலைக் களைந்து
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்து
இருள்வெளி இரண்டுக்கு ஒன்றிடம் என்ன
அருள்தரும் ஆனந்தத்து அழுத்திஎன் செவியில்
எல்லை இல்லா ஆனந்தம் அளித்து
அல்லல் களைந்தே அருள்வழி காட்டிச்
சத்தத்தி னுள்ளே சதாசிவங் காட்டி
சித்தத்தி னுள்ளே சிவலிங்கம் காட்டி
அணுவிற்கு அணுவாய் அப்பாலுக்கு அப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தின் அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கரத்தின் நிலை அறிவித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை ஆண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே.

வாக்குண்டாம் நல்ல மனம்உண்டாம் மா மலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது - பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கையான் பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு.

நல்வழி — ஔவையார்.

# 7. தமிழ்க் கவி

நாமெல்லாம் பிள்ளையார் சுழி போட்ட பின்பே எழுதத் தொடங்குவதுபோல இந்திய மண்ணில் பிறந்த கவிஞர்கள் எல்லாம் அவர்கள் எந்தமொழி பேசுபவரானாலும் விநாயகரை நினைத்து பாடிவிட்டே தம் புராணங்களையும், இதிகாசங்களையும் இலக்கியங்களையும் பாடியிருக்கிறார்கள். தமிழில் இவை போன்ற பாடல்கள் தவிர விநாயகர் மீதே பாடப்பெற்றுள்ள, 'நக்கீரர் விநாய கர் திருவகவல், செங்கழுநீர் பிள்ளையார் பிள்ளைத் தமிழ், வெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சி போன்ற சிற்றிலக்கியங்களும் உள்ளன. 11 -வது சைவத் திருமுறையில் இடம்பெற்றுள்ள நம்பியாண்டார் நம்பி பாடியுள்ள 'இரட்டை மணி மாலை', கபிலதேவனார் இயற் றிய 'இரட்டை மணி மாலை', அதிராவடிகள் இயற்றிய 'மும்மணிக்கோவை' ஆகிய மூன்றும் விநாயகரைப் பற்றி யவையாகும்.

இந்த நூற்றாண்டின் முற்பகுதியில், **மகாகவி சுப்பிரமணிய பாரதியார்** பாண்டிச்சேரியில் இருந்த போது - விநாயகருக்கு நான்கு என்ற எண்ணில் ஆசை உண்டல்லவா! மேலும் அவருக்கு பத்து முறைகள் பூஜா- தர்ப்பணம் செய்வதுபோல் - 'வெண்பா, கலித் துறை, விருத்தம், அகவல்', என்கிற நான்கு தமிழ்ப்பாவின் மணிகளைக் கொண்ட குஞ்சம், பத்து என்ற எண்ணிக்கையில், பாட்டின் இறுதி அடுத்த பாட்டின் தொடக்கமாக அமைய '**நான்மணி மாலை**' ஒன்றை விநாயகருக்குத் தொடுத்து அணிவித்திருக்கிறார். உபாசனைக்கேற்ற உடல் வளமும், மன வளமும் உண்டாக இதனை எல்லோருமே படித்து வருதல் அவசியம்.



## விநாயகர் நான்மணி மாலை

### மகாகவி சி. சுப்ரமணிய பாரதி

### வெண்பா

1. (சக்திபெறும்) பாவாணர் சாற்றுபொருள் யாதெனினும்
சித்(தி பெறச் செய்வாக்கு வல்லமைக்கா)-அத்தனே!
(நின்)றனைக்குக் காப்புரைப்பார்; நின்மீது செய்யும்நூல்
இன்றிதற்குங் காப்புநீ யே.

### கலித்துறை

2. நீயே சரணம் நினதரு
ளேசர ணஞ்சரணம்
நாயேன் பலபிழை செய்து
களைத்துனை நாடிவந்தேன்;
வாயே திறவாத மௌனத்
திருந்துன் மலரடிக்குத்
தீயே நிகர்த்தொளி வீசுந்
தமிழ்க்கவி செய்குவனே.

### விருத்தம்

3. செய்யுந் தொழிலுன் தொழிலேகாண்;
சீர்பெற் றிடநீ அருள்செய்வாய்,
வையந் தனையும் வெளியினையும்
வானத் தையும்முன் படைத்தவனே!
ஐயா! நான்முகப் பிரமா!
யானை முகனே! வாணிதனைக்
கையா லணைத்துக் காப்பவனே!
கமலா சனத்துக் கற்பகமே!

### அகவல்

4. கற்பக விநாயகக் கடவுளே, போற்றி!
சிற்பர மோனத் தேவன் வாழ்க!
வாரண முகத்தான் மலர்த்தாள் வெல்க!
ஆரண முகத்தான் அருட்பதம் வெல்க!
படைப்புக் கிறையவன், பண்ணவர் நாயகன்,
இந்திர குரு, எனது இதயத் தொளிர்வான்
சந்திர மவுலித் தலைவன் மைந்தன்
கணபதி தாளைக் கருத்திடை வைப்போம்;

குணமதிற் பலவாம்; கூறக் கேளீர்!
உட்செவி திறக்கும்; அகக்கண் ஒளிதரும்;
அக்கினி தோன்றும்; ஆண்மை வலியுறும்;
திக்கெலாம் வென்று ஜயக்கொடி நாட்டலாம்
கட்செவி தன்னைக் கையிலே யெடுக்கலாம்
விடத்தையும் நோவையும் வெம்பகை யதனையும்
துச்சமென் றெண்ணித் துயரிலா திங்கு
நிச்சலும் வாழ்ந்து நிலைபெற் றோங்கலாம்;
அச்சந் தீரும், அமுதம் விளையும்;
வித்தை வளரும்; வேள்வி ஓங்கும்;
அமரத் தன்மை எய்தவும்
இங்குநாம் பெறலாம்; இஃதுணர் வீரே.

**வெண்பா**

5. (உண)ர்வீர், உணர்வீர், உலகத்தீர்! இங்குப்
(புண)ர்வீ(ர் அமரரு)றும் போக(ம்)–கண (ப) தியைப்
(போத வடிவாகப் போற்றிப் பணிந்திடுமின்
காதலுடன் கஞ்சமலர்க் கால்).

**கலித்துறை**

6. காலைப் பிடித்தேன் கணபதி!
நின்பதங் கண்ணிலொற்றி
நூலைப் பலபல வாகச்
சமைத்து நொடிப்பொழு(தும்)
வேலைத் தவறு நிகழாது
நல்ல வினைகள் செய்துன்
கோலை மனமெனும் நாட்டின்
நிறுத்தல் குறியெனக்கே.

**விருத்தம்**

7. எனக்கு வேண்டும் வரங்களை
இசைப்பேன் கேளாய் கணபதி!

மனத்திற் சலன மில்லாமல்,
மதியில் இருளே தோன்றாமல்,
நினைக்கும் பொழுது நின்மவுன
நிலைவந் திடநீ செயல்வேண்டும்,
கனக்குஞ் செல்வம், நூறுவயது
இவையும் தரநீ கடவாயே.

அகவல்

8. கடமையாவன: தன்னைக் கட்டுதல்,
பிறர்துயர் தீர்த்தல், பிறர்நலம் வேண்டுதல்,
விநாயக தேவனாய், வேலுடைக் குமரனாய்,
நாராயணனாய், நதிச்சடை முடியனாய்,
பிறநாட் டிருப்போர் பெயர்பல கூறி,
அல்லா! யெஹோவா! எனத்தொழு தன்புறும்
தேவருந் தானாய், திருமகள், பாரதி,
உமையெனுந் தேவியர் உகந்தவான் பொருளாய்,
உலகெலாங் காக்கும் ஒருவனைப் போற்றுதல்,
இந்நான் கேயிப் பூமியி லெவர்க்கும்
கடமை யெனப்படும்; பயனிதில் நான்காம்;
அறம், பொருள், இன்பம், வீடெனு முறையே.
தன்னை யாளுஞ் சமர்த்தெனக் கருள்வாய்,
மணக்குள விநாயகா! வான்மறைத் தலைவா!
தனைத்தான் ஆளுந் தன்மைநான் பெற்றிடில்,
எல்லாப் பயன்களும் தாமே எய்தும்,
அசையா நெஞ்சம் அருள்வாய்; உயிரெலாம்
இன்புற் றிருக்க வேண்டி, நின் இருதாள்
பணிவதே தொழிலெனக் கொண்டு
கணபதி தேவா! வாழ்வேன் களித்தே.

### வெண்பா

௯. களியுற்று நின்று, கடவுளே! இங்குப்
பழியுற்று வாழ்ந்திடக்கண் பார்ப்பாய்-ஒளிபெற்று
கல்விபல தேர்ந்து கடமையெலாம் நன்காற்றித்
தோல்வினைக்கட் டெல்லாம் துறந்து.

### கலித்துறை

10. துறந்தார் திறமை பெரிததி
னும் பெரி தாகுமிங்குக்
குறைந்தா ரைக்காத் தெளியார்க்
குணவீந்து குலமகளும்
அறந்தாங்கு மக்களும் நீடூழி
வாழ்கென அண்டமெலாம்
சிறந்தாளும் நாதனைப் போற்றிடுந்
தொண்டர் செயுந்தவமே.

### விருத்தம்

11. தவமே புரியும் வகையறியேன்,
சலியா துறநெஞ் சறியாது,
சிவமே நாடிப் பொழுதனைத்துந்
தியங்கித் தியங்கி நிற்பேனை,
நவமா மணிகள் புனைந்தமுடி
நாதா! கருணா லயனே! நந்
துவமா சியதோர் பிரணவமே!
அஞ்சேல் என்று சொல்லுறியோ.

### அகவல்

12. சொல்லினுக் கரியனாச் சூழ்ச்சிக் கரியனாய்ப்
பல்லுரு வாகிப் படர்ந்தவான் பொருளை,
உள்ளொளி யாகி உலகங் காக்கும்
சக்தியே தானாந் தனிச்சுடர்ப் பொருளை,

சக்தி குமாரனைச் சந்திர மவுலியைப்
பணிந்தவ னுருவிலே பாவனை நாட்டி,
ஓமெனும் பொருளை உளத்திலே நிறுத்தி,
சக்தியைக் காக்குந் தந்திரம் பயின்று
யார்க்கும் எளியனாய், யார்க்கும் வலியனாய்,
யார்க்கும் அன்பனாய், யார்க்கும் இனியனாய்
வாழ்ந்திட விரும்பினேன்; மனமே! நீயிதை
ஆழ்ந்து கருதி, ஆய்ந்தாய்ந்து, பலமுறை
சூழ்ந்து, தெளிந்து, பின் சூழ்ந்தார்க் கெல்லாம்
கூறிக் கூறிக் குறைவறத் தேர்ந்து,
தேறித் தேறிநான் சித்திபெற் றிடவே,
நின்னா லியன்ற துணைபுரி வாயேல்,
பொன்னால் உனக்கொரு கோயில் புனைவேன்;
மனமே! எனைநீ வாழ்வித் திடுவாய்!
வீணே யுழலுதல் வேண்டா,
சக்தி குமாரன் சரண்புகழ் வாயே!

வெண்பா

13. புகழ்வோம் கணபதிநின் பொற்கழலை நாளும்
திகழ்வோம் பெருங்கீர்த்தி சேர்ந்தே–இகழ்வோமே
புல்லரக்கப் பாதகரின் பொய்யெலாம்; ஈங்கிதுகாண்
வல்லபைகோன் தந்த வரம்.

கலித்துறை

14. வரமே நமக்கிது கண்டீர்
கவலையும் வஞ்சனையும்
கரவும் புலமை விருப்பமும்
ஐயமும் காய்ந்தெறிந்து,
'சிரமீது எங்கள் கணபதி
தாள்மலர் சேர்த்தெமக்குத்

தரமேகொல் வானவர்' என்றுளத்
தேகளி சார்ந்ததுவே.

**விருத்தம்**

15. சார்ந்து நிற்பாய் எனதுளமே,
சலமும் கரவும் சஞ்சலமும்
பேர்ந்து, பரம சிவானந்தப்
பேற்றை நாடி, நாடோறும்
ஆர்ந்த வேதப் பொருள்காட்டும்
ஐயன், சக்தி தலைப்பிள்ளை,
கூர்ந்த இடர்கள் போக்கிடுநங்
கோமான் பாதக் குளிர்நிழலே.

**அகவல்**

16. நிழலினும் வெயிலினும் நேர்ந்தநற் றுணையாய்த்
தழலினும் புனலினும் அபாயந் தவிர்த்து,
மண்ணினும் காற்றினும் வானினும் எனக்குப்
பகைமை யொன்றின்றிப் பயந்தவிர்த் தாள்வான்,
உள்ளத் தோங்க நோக்குறும் விழியும்,
மௌன வாயும், வரந்தரு கையும்,
உடையநம் பெருமான் உணர்விலே நிற்பான்,
ஓமெனும் நிலையில் ஒளியாத் திகழ்வான்,
வேத முனிவர் விரிவாப் புகழ்ந்த
பிருஹஸ் பதியும் பிரமனும் யாவும்
தானே யாகிய தனிமுதற் கடவுள்,
யானென தற்றார் ஞானமே தானாய்
முக்தி நிலைக்கு மூலவித் தாவான்,
ஸத்தெனத் தத்தெனச் சதுர்மறை யாளர்
நித்தமும் போற்றும் நிர்மலக் கடவுள்,
ஏழையர்க் கெல்லாம் இரங்கும் பிள்ளை,
வாழும் பிள்ளை, மணக்குளப் பிள்ளை,

வெள்ளாடை தரித்த விட்டுணு வென்று
செப்பிய மந்திரத் தேவனை
முப்பொழு தேத்திப் பணிவது முறையே.

### வெண்பா

17. முறையே நடப்பாய், முழுமூட நெஞ்சே!
இறையேனும் வாடாய் இனிமேல்—கறையுண்ட
கண்டன் மகன்வேத காரணன் சக்திமகன்
தொண்டருக் குண்டு துணை.

### கலித்துறை

18. துணையே! எனதுயி ருள்ளே
யிருந்து சுடர்விடுக்கும்
மணியே! எனதுயிர் மன்னவனே!
என்றன் வாழ்வினுக்கோர்
அணியே! எனுள்ளத்தி லாரமு
தே! என தற்புதமே!
இணையே துனக்குரைப் பேன், கடை
வானில் எழுஞ்சுடரே!

### விருத்தம்

19. சுடரே போற்றி! கணத்தேவர்
துரையே போற்றி! எனக்கென்றும்
இடரே யின்றிக் காத்திடுவாய்,
எண்ணா யிரங்கால் முறையிட்டேன்;
படர்வான் வெளியிற் பலகோடி
கோடி கோடிப் பல்கோடி
இடறா தோடும் அண்டங்கள்
இசைத்தாய், வாழி இறையவனே!

### அகவல்

௨௦. இறைவி இறைவன் இரண்டும் ஒன்றாகித்
தாயாய்த் தந்தையாய், சக்தியும் சிவனுமாய்
உள்ளொளி யாகி உலகெலாந் திகழும்
பரம்பொரு ளேயோ! பரம்பொரு ளேயோ!
ஆதி மூலமே! அனைத்தையும் காக்கும்
தேவ! தேவா! சிவனே! கண்ணா!
வேலா! சாத்தா! விநாயகா! மாடா!
இருளா! சூரியா! இந்துவே! சக்தியே!
வாணீ! காளீ! மாமக ளேயோ!
ஆணாய்ப் பெண்ணாய் அலியாய், உள்ளது
யாதுமாய் விளங்கும் இயற்கைத் தெய்வமே!
வேதச் சுடரே! மெய்யாங் கடவுளே!
அபயம் அபயம் அபயம் நான் கேட்டேன்;
நோவு வேண்டேன், நூறாண்டு வேண்டினேன்;
அச்சம் வேண்டேன், உன்துணை வேண்டினேன்;
உடைமை வேண்டேன், உன்துணை வேண்டினேன்;
வேண்டா தனைத்தையும் நீக்கி
வேண்டிய தனைத்தும் அருள்வதுன் கடனே.

### வெண்பா

21. கடமைதா னேது? கரிமுகனே! வையத்
திடம் நீ யருள்செய்தாய், எங்கள்—உடைமைகளும்
இன்பங் களுமெல்லாம் ஈந்தாய்நீ, யாங்களுனக்கு
என்புரிவோம் கைம்மா றியம்பு?

### கலித்துறை

22. இயம்பு மொழிகள் புகழ்மறை
யாகும்; எடுத்தவினை
பயன்படும்; தேவர் இருபோதும்
வந்து பதந்தருவார்;

அயன்பதி முன்னோன் கணபதி
சூரியன் ஆனைமுகன்
வியன்புகழ் பாடிப் பணிவார்
தமக்குறும் மேன்மைகளே.

### விருத்தம்

23. மேன்மைப் படுவாய் மனமே! கேள்
விண்ணின் இடிமுன் விழுந்தாலும்,
பான்மை தவறி நடுங்காதே,
பயத்தா லேதும் பயனில்லை;
யான்முன் னுரைத்தேன் கோடிமுறை,
இன்னுங் கோடி முறைசொல்வேன்,
ஆன்மா வான கணபதியின்
அருளுண்டு அச்சம் இல்லையே.

### அகவல்

24. அச்ச மில்லை, அமுங்குத லில்லை,
நடுங்குத லில்லை, நாணுத லில்லை,
பாவ மில்லை, பதுங்குத லில்லை,
ஏது நேரினும் இடர்ப்பட மாட்டோம்;
அண்டஞ் சிதறினால் அஞ்ச மாட்டோம்;
கடல்பொங்கி எழுந்தாற் கலங்க மாட்டோம்;
யார்க்கும் அஞ்சோம், எதற்கும் அஞ்சோம்;
எங்கும் அஞ்சோம், எப்பொழுதும் அஞ்சோம்;
வான முண்டு, மாரி யுண்டு;
ஞாயிறும் காற்றும் நல்ல நீரும்
தீயும் மண்ணும் திங்களும் மீன்களும்
உடலும் அறிவும் உயிரும் உளவே;
தின்னப் பொருளும், சேர்ந்திடப் பெண்டும்,
கேட்கப் பாட்டும், காணநல் லுலகும்,
களித்துரை செய்யக் கணபதிப் பெயரும்

என்றுமிங் குளவாம்; சலித்திடாய்; ஏழை
நெஞ்சே! வாழி! நேர்மையுடன் வாழி!
வஞ்சகக் கவலைக் கிடங்கொடேல் மன்னோ!
தஞ்ச முண்டு, சொன்னேன்,
செஞ்சுடர்த் தேவன் சேவடி நமக்கே.

### வெண்பா

25. நமக்குத் தொழில்கவிதை, நாட்டிற்கு உழைத்தல்,
இமைப்பொழுதுஞ் சோரா திருத்தல்,–உமைக்கினிய
மைந்தன் கணநாதன் நங்குடியை வாழ்விப்பான்;
சிந்தையே! இம்மூன்றும் செய்.

### கலித்துறை

26. செய்யுங் கவிதை பராசக்தி
யாலே செயப்படுங்காண்,
வையத்தைக் காப்பவள் அன்னை
சிவசக்தி வண்மையெலாம்
ஐயத்தி லுந்துரி தத்திலுஞ்
சிந்தி யழிவதென்னே
பையத் தொழில்புரி நெஞ்சே!
கணாதிபன் பக்திகொண்டே.

### விருத்தம்

27. பக்தி யுடையார் காரியத்திற்
பதறார், மிகுந்த பொறுமையுடன்
வித்து முளைக்குந் தன்மைபோல்
மெல்லச் செய்து பயனடைவார்
சக்தி தொழிலே அனைத்துமெனிற்
சார்ந்த நமக்குச் சஞ்சலமேன்?
வித்தைக் கிறைவா! கணநாதா!
மேன்மைத் தொழிலிற் பணியெனையே.

### அகவல்

28. எனைநீ காப்பாய், யாவுமாந் தெய்வமே!
பொறுத்தா ரன்றோ பூமி யாள்வார்
யாவும் நீ யாயின் அனைத்தையும் பொறுத்தல்
செவ்விய நெறி, அதிற் சிவநிலை பெறலாம்;
பொங்குதல் போக்கிப் பொறையெனக் கீவாய் ;
மங்கள குணபதி! மணக்குளக் கணபதி!
நெஞ்சக் கமலத்து நிறைந்தருள் புரிவாய் ;
அகல்விழி உமையாள் ஆசை மகனே!
நாட்டினைத் துயரின்றி நன்கமைத் திடுவதும்,
உள்ளமெனு நாட்டை ஒருபிழை யின்றி
ஆள்வதும், பேரொளி ஞாயிறே யனைய
சுடர்தரு மதியொடு துயரின்றி வாழ்தலும்
நோக்கமாக் கொண்டு நின்பதம் நோக்கினேன்;
காத்தருள் புரிக, கற்பக விநாயகா!
காத்தருள் புரிக, கடவுளே! உலகெலாம்
கோத்தருள் புரிந்த குறிப்பரும் பொருளே!
அங்குச பாசமும் கொம்பும் தரித்தாய்
எங்குல தேவா! போற்றி!
சங்கரன் மகனே! தாளிணை போற்றி!

### வெண்பா

29. போற்றி! கலியாணி புதல்வனே! பாட்டினிலே
ஆற்ற லருளி அடியேனைத் – தேற்றமுடன்
வாணிபதம் போற்றுவித்து வாழ்விப்பாய்! வாணியருள்
வீணையொலி என்நாவில் விண்டு.

### கலித்துறை

30. விண்டுரை செய்குவன் கேளாய்
புதுவை விநாயகனே!
தொண்டுன தன்னை பராசக்திக்

கென்றுந் தொடர்ந்திடுவேன் ;
பண்டைச் சிறுமைகள் போக்கி,
என்னாவிற் பழுத்தசுவைத்
தெண்டமிழ்ப் பாடல் ஒருகோடி
மேவிடச் செய்குவையே.

### விருத்தம்

31. செய்யாள் இனியாள் ஸ்ரீதேவி,
செந்தாமரையிற் சேர்ந்திருப்பாள்,
கையா ளெனநின் றடியேன்செய்
தொழில்கள் யாவும் கைகலந்து
செய்வாள் ; புகழ்சேர் வாணியுமென்
னுள்ளே நின்று தீங்கவிதை
பெய்வாள், சக்தி துணைபுரிவாள் ;
பிள்ளாய் ! நின்னைப் பேசிடிலே.

### அகவல்

32. பேசாப் பொருளைப் பேசநான் துணிந்தேன்,
கேட்கா வரத்தைக் கேட்கநான் துணிந்தேன் ;
மண்மீ துள்ள மக்கள், பறவைகள்,
விலங்குகள், பூச்சிகள், புற்பூண்டு, மரங்கள் :
யாவுமென் வினையால் இடும்பை தீர்ந்தே,
இன்பமுற் றன்புடன் இணங்கி வாழ்ந்திடவே
செய்தல் வேண்டும், தேவ தேவா!
ஞானாகாசத்து நடுவே நின்றுநான்
'பூமண்ட லத்தில் அன்பும் பொறையும்
விளங்குக; துன்பமும், மிடிமையும், நோவும்,
சாவும் நீங்கிச் சார்ந்தபல் லுயிரெலாம்
இன்புற்று வாழ்க' என்பேன் ! இதனை நீ
திருச்செவி கொண்டு திருவுளம் இரங்கி,
'அங்ஙனே யாகுக' என்பாய், ஐயனே!

இந்நாள், இப்பொழு தெனக்கிவ் வரத்தினை
அருள்வாய் ; ஆதி மூலமே ! அநந்த
சக்தி குமாரனே! சந்திர மவுலீ!
நித்தியப் பொருளே ! சரணம்
சரணம் சரண்ம் சரணமிங் குனக்கே.

**வெண்பா**

33. உனக்கேஎன் ஆவியும் உள்ளமும் தந்தேன் ;
மனக்கேதம் யாவினையும் மாற்றி,–(எனக்கேநீ)
நீண்டபுகழ் வாணாள் நிறைசெல்வம் பேரழகு
வேண்டுமட்டும் ஈவாய் விரைந்து.

**கலித்துறை**

34. விரைந்துன் திருவுள மென்மீ
திரங்கிட வேண்டுமையா!
குரங்கை விடுத்துப் பகைவரின்
தீவைக் கொளுத்தியவன்
அரங்கத் திலேதிரு மாதுடன்
பள்ளிகொண் டான்மருகா!
வரங்கள் பொழியும் முகிலே!
என்னுள்ளத்து வாழ்பவனே!

**விருத்தம்**

35. வாழ்க புதுவை மணக்குளத்து
வள்ளல் பாத மணிமலரே!
ஆழ்க உள்ளம் சலனமிலாது!
அகண்ட வெளிக்கண் அன்பினையே
சூழ்க! துயர்கள் தொலைந்திடுக!
தொலையா(இன்பம் விளைந்திடுக!)
வீழ்க கலியின் வலியெல்லாம்
கிருத யுகந்தான் மேவுகவே.

## அகவல்

36. மேவி மேவித் துயரில் வீழ்வாய்,
எத்தனை கூறியும் விடுதலைக் கிசையாய்;
பாவி நெஞ்சே! பார்மிசை நின்னை
இன்புறச் செய்வேன்; எதற்குமினி அஞ்சேல்;
ஐயன் பிள்ளை (யார்) அருளால் உனக்குநான்
அபயமிங் களித்தேன்....நெஞ்(சே)
நினக்குநான் உரைத்தன நிலைநிறுத் தி(டவே)
தீயிடைக் குதிப்பேன், கடலுள் வீழ்வேன்,
வெவ்விட முண்பேன், மேதினி யழிப்பேன்;
ஏதுஞ் செய்துனை இடரின்றிக் காப்பேன்;
மூட நெஞ்சே! முப்பது கோடி
முறையுனக் குரைத்தேன்; இன்னும் மொழிவேன்;
தலையிலிடி விழுந்தால் சஞ்சலப் படாதே;
ஏது நிகழினும் 'நமக்கென்' என்றிரு;
பராசக்தி யுளத்தின் படியுலகம் நிகழும்;
நமக்கேன் பொறுப்பு? "நான் என்றோர் தனிப்பொருள்
இல்லை; நானெனும் எண்ணமே வெறும்பொய்"
என்றான் புத்தன்; இறைஞ்சுவோம் அவன்பதம்.
இனியெப் பொழுதும் உரைத்திடேன். இதை நீ
மறவா திருப்பாய், மடமை நெஞ்சே!
கவலைப் படுதலே கருநரகு, அம்மா!
கவலையற் றிருத்தலே முக்தி;
சிவனொரு மகனிதை நினக்கருள் செய்கவே.

## வெண்பா

37. செய்கதவம்! செய்கதவம்! நெஞ்சே! தவம்செய்தால்
எய்த விரும்பியதை எய்தலாம்;–வையகத்தில்
அன்பிற் சிறந்த தவமில்லை; அன்புடையார்
இன்புற்று வாழ்தல் இயல்பு.

### கலித்துறை

38. இயல்பு தவறி விருப்பம்
விளைதல் இயல்வதன்றாம்
செயலிங்கு சித்த விருப்பினைப்
பின்பற்றும்; சீர்மிகவே
பயிலு நல்லன்பை இயல்பெனக்
கொள்ளுதிர் பாரிலுள்ளீர்!
முயலும் வினைகள் செழிக்கும்
விநாயகன் மொய்ம்பினிலே.

### விருத்தம்

39. மொய்க்குங் கவலைப் பகைபோக்கி,
முன்னோன் அருளைத் துணையாக்கி,
எய்க்கும் நெஞ்சை வலியுறுத்தி,
உடலை இரும்புக் கிணையாக்கிப்
பொய்க்குங் கலியை நான்கொன்று
பூலோ கத்தார் கண்முன்னே,
மெய்க்குங் கிருத யுகத்தினையே
கொணர்வேன், தெய்வ விதியிஃதே.

### அகவல்

40. விதியே வாழி! விநாயகா வாழி!
பதியே வாழி! பரமா வாழி!
சிதைவினை நீக்கும் தெய்வமே, போற்றி!
புதுவினை காட்டும் புண்ணியா, போற்றி!
மதியினை வளர்க்கும் மன்னே, போற்றி!
இச்சையும் கிரியையும் ஞானமும் என்றாக்கு
மூல சக்தியின் முதல்வா, போற்றி!
பிறைமதி சூடிய பெருமான் வாழி!
நிறைவினைச் சேர்க்கும் நிர்மலன் வாழி!
காலம் மூன்றையும் கடந்தான் வாழி!

